# நிர்வாண சடகம்

(ஆதிசங்கரர் அருளியது)



சுவாமி பிரபஞ்சநாதன்

ஓம் ஸ்ரீ குருப்யோ நம:

# நிர்வாண சடகம்

**(ஆதி சங்கரர் அருளியது)**

**தமிழாக்கம்**

**சுவாமி பிரபஞ்சநாதன்**

# நிர்வாண சடகம்

## முன்னுரை

சடகம் என்றால் ஆறு என்று பொருள். இது ஆறு ஸ்லோகங்கள் கொண்டது.

இந்தத் தேகம் நானல்ல, எனது இந்திரியங்கள் நானல்ல என்று நாம் பார்க்கும் அனைத்து உபாதிகளையும் வேதாந்த வாக்கின்படி நீக்கிவிட்டு, "இதுவல்ல, அதுவல்ல" என்று கூறி, இறுதியில் எஞ்சியுள்ள ஜீவான்மாவும், ஆதிப்பரமான்மாவுன் ஒன்றே என்று சொல்லும் வேத மகா வாக்கியங்களின் உண்மையை ஆராய்ந்து மிக அழகாக எழுதப்பட்ட இந்த ஆறு ஸ்லோகங்கள் பகவான் ஸ்ரீ ஆதிசங்கரரால் இயற்றப்பட்டது.

கயிற்றை பாம்பு என்று பார்த்துக் கொண்டிருக்கும் வரை அந்தப் பிரமை நம்மை விட்டு அகலாது. பார்க்கப்படுவது என்ன என்று முதலில் தோன்ற வேண்டும். அதன் உண்மையை அறிய தேவையான ஒளியும் வேண்டும். அந்த ஒளியும் சரியான கோணத்தில் விழவேண்டும். அப்போதுதான் ஒருவனுக்கு உண்மை தெரிய வரும்.

அதே போன்று இங்கு முதலில் அழியும்-அழியாத பொருட்களின் தன்மைகளை ஒருவன் அறியவேண்டும். உடல், மனம், புத்தி இவைகள் எல்லாம் ஒருநாள் அழியக்கூடியன என்றால், நமது தினசரி அனுபவங்களிலேயே அவைகள் எப்போது அழிகின்றன, அப்படி அழிந்தும் நாம் இல்லாது போய்விட்டோமா என்று பார்த்து, அவைகள் எல்லாம் நமக்கு

இருக்கின்றன என்றால் நாம் யார் என்று நமது தன்மையை நம் அனுபவங்கள் கொண்டே அறிய முயற்சிக்க வேண்டும்.

எது நித்தியமோ அதை மட்டும் பற்றிக்கொண்டு, அநித்தியமானவைகளை அகற்றுவதில் முதல் படியாக உடல் பற்றிய உண்மைகளை இங்கு அறிகின்றோம்.

நம்மை யாராவது சுட்டிக் காட்டும்போதோ, அல்லது ஆழ்ந்த தூக்கத்தின் பின்போ நாம் முதலில் காண்பதும், உணர்வதும் நமது ஸ்தூல உடலைத்தான்.

அதற்கே பிறப்பு, வளர்ச்சி, இறப்பு முதலான பருவங்கள் இருக்கின்றன. அதேபோல நமது கனவில் நாம் உருவாக்கும் ஒரு சூக்கும உடலுக்கும் வெவ்வேறு பருவங்கள் இருப்பது போலத்தான் கனவில் தெரிகிறது.

ஆழ்ந்த உறக்கத்தில் இருக்கும் காரண உடலைப் பற்றி நாம் நன்கு அறியாவிட்டாலும், நமது அனுபவத்தின் படி அதுவும் தினம் தினம் வந்து போவது போலத்தான் அவைகளை நாம் அறிகிறோம்.

அதாவது தூல மற்றும் சூக்ஷ்ம உடல்கள் அந்தக் காரண உடலில் தினந்தோறும் அடங்கி, பின் எழுகிறது. அப்படி அடங்க முடியாது போனால் சில நாட்களுக்குள்ளேயே தூல உடலும் காணாது மறைந்து விடும் என்பதை நாம் நன்கு அறிவோம்.

ஆக இவை எல்லாவற்றிற்குமே ஒரு தொடக்கமும், வளர்ச்சியும், முடிவும் இருப்பது நன்கு தெரிகிறது. இவை அனைத்திற்கும் மூல காரணமாக இருப்பதும் அல்லாது, இவை அனைத்தையும் சாட்சியாகப் பார்த்துக்கொண்டிருக்கும் “நான்” இவைகள் இருந்தும் வேறுபட்டவன்.

நமது உடல் நமக்குத் தெரிந்த பின்தான் உலகமே நமக்குத் தெரிய வருகிறது. அந்த உலகத்தை நாம் நமது சூக்ஷ்ம ஐம்புலன்களால் அறிகிறோம். ஐம்புலன்களும் செயல்பட அதனதற்கு வேண்டிய தூலக் கருவிகளும் நம்மிடம் இருக்கின்றன. அவைகளும் நமது உடலின் அங்கங்களே.

உடலே நாம் அல்ல என்கிறபோது அந்தக் கருவிகளோ, அல்லது அவைகளை இயக்கும் நுண்புலன்களோ நாமாக எப்படி இருக்க முடியும்?

அதனால் அவைகளும் நாம் அல்ல. அப்படியென்றால் நம்மை நாமாக எப்போதும் உணர்கிறோமே, அந்த "நான்" யார் என்று கேட்டு, அதைப் பற்றி சதா சர்வ காலமும் சிந்தித்துப் பார்க்கவேண்டும்.

இந்த '**நான்**' என்று கிளம்புகின்றவன் யார்? எங்கு இருக்கிறான் என்று ஆராய்ந்து, உணர்ந்து இருப்பவர்களின் இதய குகைக்குள்ளே, தானே தானாக ஒளிர்ந்து கொண்டிருக்கும் சிவமே என்பதை இந்த ஆறு பாடல்களில் வலியுறுத்தப்படுகின்றது.



# <u>நிர்வாண சடகம்</u>

## <u>ஸ்லோகம் 1.</u>

**மனோ புத்யஹங்கார சித்தா நினாஹம்,**
**ந ச ச்ரோத்ர ஜிஹ்வே, ந ச க்ராண நேத்ரே,**
**ந ச வ்யோம பூமிர், ந தேஜோ நவாயு:**
**சிதானந்த ரூபம்; சிவோஹம்! சிவோஹம்!**

## <u>விளக்கம்:-</u>

நான் மனம் அல்ல புத்தியும் அல்ல
சித்தமும் அல்ல, நான் காதுகளும் அல்ல நாக்கும் அல்ல
மூக்கும் அல்ல கண்களும் அல்ல
வானமும் அல்ல பூமியும் அல்ல
அக்னியும் அல்ல காற்றும் அல்ல
சித்தமெல்லாம் சிவமான சிவானந்த ஸ்வரூபம்
சிவமே நான்! சிவமே நான்!

## <u>ஸ்லோகம் 2.</u>

**ந ச ப்ராண சங்க்யோ, ந வை பஞ்சவாயு:**
**ந வாக் சப்த தாதுர், ந வா பஞ்சகோச:**
**ந வாக் பாணி பாதம், ந சோப ஸ்தபாயு:**
**சிதானந்த ரூபம்; சிவோஹம்! சிவோஹம்!**

**விளக்கம்:-**

நான் பிராணனும் அல்ல பஞ்ச வாயுக்களும் அல்ல
ஏழு தாதுக்களும் அல்ல பஞ்ச கோஷங்களும் அல்ல
பேச்சும் அல்ல கைகால்களும் அல்ல
செயல்படுகின்ற புலன்களும் அல்ல
சித்தமெல்லாம் சிவமான சிவானந்த ஸ்வரூபம்
சிவமே நான்! சிவமே நான்!

**ஸ்லோகம் 3.**

**ந மே த்வேஷ ராகௌ, ந மே லோப மோஹௌ,**
**மதோ நைவ, மே நைவ மாத்ஸர்ய பாவ:**
**ந தர்மோ ந சார்த்தோ, ந காமோ ந மோக்ஷ:**
**சிதானந்த ரூபம்; சிவோஹம்! சிவோஹம்!**

**விளக்கம்:-**

எனக்கு வெறுப்பும் இல்லை விருப்பமும் இல்லை
பேராசையும் இல்லை மோகமும் இல்லை
கர்வமும் இல்லை பொறாமையும் இல்லை
அறம் பொருள் இன்பம் வீடு என்று எதுவுமில்லை
சித்தமெல்லாம் சிவமான சிவானந்த ஸ்வரூபம்
சிவமே நான்! சிவமே நான்!

## ஸ்லோகம் 4.

**ந புண்யம் ந பாபம், ந ஸௌக்யம் ந துக்கம்!**
**ந மந்த்ரோ ந தீர்த்தம், ந வேதா ந யக்ஞ:**
**அஹம் போஜனம் நைவ, போஜ்யம் ந போக்தா,**
**சிதானந்த ரூபம்; சிவோஹம்! சிவோஹம்!**

## விளக்கம்:-

எனக்குப் புண்யமும் இல்லை பாவமும் இல்லை
ஸௌக்யமும் இல்லை துக்கமும் இல்லை
மந்திரங்களும் இல்லை தீர்த்த ஸ்தலங்களும் இல்லை
மறைகளும், வேள்விகளும் கூட எனக்கு இல்லை
நான் உணவும் அல்ல உண்பவனும் அல்ல
உண்ணப்படுபவனும் அல்ல
சித்தமெல்லாம் சிவமான சிவானந்த ஸ்வரூபம்
சிவமே நான்! சிவமே நான்!

## ஸ்லோகம் 5.

**ந ம்ருத்யுர் ந சங்கா, ந மே ஜாதி பேத:**
**பிதா நைவ, மே நைவ மாதா, ந ஜன்மா**
**ந பந்துர் ந மித்ரம், குருர் நைவ சிஷ்யா:**
**சிதானந்த ரூபம்; சிவோஹம்! சிவோஹம்!**

## விளக்கம்:-

எனக்கு மரணமும் இல்லை மரண பயமும் இல்லை
சாதியும் இல்லை ஜாதி பேதமுமில்லை
தந்தையும் இல்லை தாயும் இல்லை இவர்களால்
எனக்கு ஜன்மமும் இல்லை
உற்றமும் இல்லை சுற்றமும் இல்லை
குரு சிஷ்யன் என்று யாரும் இல்லை
சித்தமெல்லாம் சிவமான சிவானந்த ஸ்வரூபம்
சிவமே நான்! சிவமே நான்!

## ஸ்லோகம் 6.

**அஹம் நிர்விகல்போ, நிராகார ரூபோ,**
**விபுத் வாச்ஸ, சர்வத்ர, சர்வேந்த்ரி யானாம்**
**நச சங்கடம் நைவ, முக்திர் ந மேயா**
**சிதானந்த ரூபம்; சிவோஹம்! சிவோஹம்!**

## விளக்கம்:-

நான் குணபேதம் இல்லாதவன் எந்த ரூபமும் இல்லாதவன்
எங்கெங்கும் எப்போதும் எல்லா புலன்களிலும் நீக்கமற
நிறைந்திருக்கின்றவன்
எனக்கு பந்தமும் இல்லை முக்தியும் இல்லை
நான் அளக்க முடியாதவன்
சித்தமெல்லாம் சிவமான சிவானந்த ஸ்வரூபம்
சிவமே நான்! சிவமே நான்!

**ஓம் தத் சத்!**

# நிர்வாண சடகம்

(ஆதிசங்கரர் அருளியது)



சுவாமி பிரபஞ்சநாதன்